க்குச்சூரியகலையாயிருந்தால் சூரியன்சுவாசத்தை ஏறவுள்ளேயிழுத்து அக்காலையேமூன்றடி முன்னிட்டுவைத்துப்பின்பு சதாவாய் நடந்துவழியில் கொஞ்சதூரம்நிற்காமல் போகவேண்டியது (இதுஅதற்குசாந்தி) சூரியன்பலன்கெட்டுப்போகும், தீமையில்லை, சேல்போலுங்கண்களையுடையபெண்ணே போகிறகாரியஞ்செயமாகும், இப்படியல்லாமல் வடக்குதிசையுங்கிழக்குதிசையும் (யாத்திரை) சந்திரனடக்கும்போதுபோனால், போகிறவிடத்தில் ஒருவனுக்கொருவன் விரோதப்பட்டுப்போனவன்திரும்பமாட்டான், மேற்குத்திசையுந்தெற்குத்திசையும் சூரியகலைபாயும்போது யாத்திரைபோனால், சலத்தினால் அல்லதுமழையினால்இறந்துபோவார்கள், கச்சிறுவிறுகி நெருங்கியதனங்களையும் இப்போதுதானற்றுப்போவது போற்றோற்றுகின்றஇடையினையுமுடைய பெண்ணே விசுவாசித்துப்பார்-எ-று. ()

ஒருவனுக்குநன்மைதீமைசொல்லுமார்க்கங்கூறுகின்றார்.

காணவொருகருமத்தைக் குறித்துவந்தோன் கருதியமுன்னுமிடமுமேனுமிருந்து, பேனுவலமூங்கிழும்பின்னும் வெய்யோன் பேசியசொல்லெழுத்திரட்டைசோமனாகு, மானுமெழுத்தொற்றையேற் கதிரோனாகுமதிக்குமவன் பூரணத்தில்வந்துகேட்கிற், பூணவுரைத்தனவெல்லாநன்றேயாகும் பொல்லாதசூனியத்திற் புகனுவோர்க்கே - - - - *

(இ-ள்) நாம்நினைப்பதுங்காரியம்நன்றோதீதோ, கண்டறிவோமென்றுவந்தவன் முன்-ய-ங்-கவியிற்சொல்லியபடிசூரியகலைநடக்கும்போது அவனப்பூரணபக்கமாகவேயிருந்தானாகில், அவன்பொருந்தச்சொன்னகாரியங்களெல்லாம் அவனுக்குச்சித்திக்கும், அப்படியில்லாமல் வலதுபக்கத்தில்நின்றாலும், சாம்பார்க்கிறவன் மேலிருக்க, வந்தவன் கீழிருந்துகேட்டாலும், நேர்நேரே பின்னிருந்துகேட்டாலும், அச்சூரியகலைக்குடைய பலிதமேசொல்க, சந்திரகலை நடக்கும்போது அவனைப்பூரணபக்கமாகவே யிருந்து வினவினானாகில், அவன்சொன்னகாரியங்களெல்லாம் அவனுக்குப்பலிக்கும், அப்படியில்லாமல் இடதுபக்கத்தில் நின்றாலும், நேர்நேரே முன்னேநின்றாலும், மேலிடத்திலிருந்தாலும், அச்சந்திரகலைக்குடைய குணமேசொல்க இதுவல்லாமல், சரம்ஓடாத சூனியபக்கத்தில் நின்றுகேட்டானாகில், அவன்கேட்டகாரியம் பொல்லாததாகும் பலிக்கமாட்டாதென்க, அல்லாமலும், அவன்முதல் வாய்திறந்து சொன்னவார்த்தையின் எழுத்தையெண்ணிப்பார்த்து, ஒற்றைபடையாகில் சூரியனுடைய குணஞ்சொல்க, இரட்டையாகில் சந்திரன்குணஞ்சொல்க, மேல் கீழ்- என்றது, மெத்தைவீட்டையும், கிணறுமுதலிய பள்ளக்குழிகளைக் குறித்ததென்றறிக

(இப்படியாக) ருகூ-வகையிற்சொல்லியிருக்கின்றதே, இவையெல்லா மேககாலத்தி லொத்திருக்கவேண்டுமென்பதில்லை, எதாவதொன்றை ப்பார்த்துச் சொல்லலாமென்பது கருத்து,-மற்றும் வருவனவற்றற் காண்க-இன்னமும் விரித்துச்சொல்லுமளவில் சந்திரனுடையதிசை யும்-பக்கமும் (அதுபூரணமானாலுஞ்சரிதான்) கிஞ்சித்துமத்திமம், சூரியனுடைய திசையும்பக்கமும் (அதுசூனியமானாலுஞ் சரிதான்) திரணமாயினு நன்மையுண்டேயல்லது வியர்த்தமாகாது, இதற்குப் பிரமாணம் (கூங)கவியிலும்(எ-ங)கவியிலும்- சந்திரனைத்திரணகிமெ ன்றுஞ், சூரியனைச் சர்ராசியென்றுஞ் செப்பியிருப்பதனையறிக, இக் கவிகளில்-உரி-பண்பு-.அல்லது அடைமொழிகளை சேரவிடாமல்ப தவுரையாய்ச்சொல்லி வருவோமென்றால், விரிவுரைக்கு இசைவுபட் டுவருவதரிது ஆயினுமவ்வுரிகளைமாத்திரம் சேர்த்துக்கொண்டு வரு வோமென்றால், ஒருஸ்திரீயானவள் தன்புருஷனுக்கு அமளியிற்சம் போககாலத்தில்கால்கைபடுதல்முதலிய கற்புமைதவறுதல் கூடாதெ ன்றுஅங்கமவைகளை யிருக்கக்காண்பிக்கப்புகுவாள், புகுந்தால் அச் சதிபதிகள் கொண்டகருத்து ஒருமித்துத்தடையின்றி நிறைவேறு மோ, எறுதுபோல் இங்கும் விகாரமில்லாமல் உரைபுணர் வுறமாட் டாததால், சமையஉச்சிதமாய்நேர்படுத்தவும்- நிராகரிக்கவுமாயிற்று.

இதுவுமது, அதினும்-மூன்-ம ங-கவியிற்சொல்லிய பூரணசூனியங்களின் விகற்பங்கூறுகின்றார்.

கேடென்றேன்பரிகொடுத்தோ னஞ்சுதின்றேன் கிடையினிற்
சாவென்றேன் கிளர்நோய்கொண்டான், பாடொன்றுமிலை
சூனியத்தேயாகிற்பலித்துவிடும் பூரணத்திற்பகர்ந்தவெல்லாம்,
ஆடும்பையரவென்னவல்குலாளே யடுத்தொருவன் வந்ததிசை
சோமனுக்,நீடுஞ்சொல்லிரவியா நிற்குமாகினினைந்தமொழியா
காதுநின்றகேளே - , - - - - ✳

(இ ள்) ஒருவன்வந்து (நானின்னதனால்) கெட்டுப்போனேனெ ன்றாலும்(நானின்னதை) பறிகொடுத்தேனென்றாலும், விடங்கடித்து, அல்லது விடமுண்டேனென்றாலும், இத்தாபடுக்கையிற்றனேபிரா ணன்போகின்றதுயென்றாலும், அல்லது இவைமுதலாகச்சொல்லப் பட்ட அபாயகுணகுறிகள் எவையாயினுஞ்சரிதான், சரமோடாதசூ னியபக்கமாய்வந்துநின்றானால் ஒருவருத்தமுமில்லை நிவர்த்தியாய் ப்போகுமெனக (அப்படியல்லாமல்) சரமோடுகிறபக்கமாகிய பூர ணபக்கத்தில்வந்துநின்று சொல்வானாகில், வந்தவன் எப்படிஎப்படிச் சொன்னானோஅப்படிஅப்படியே லபித்துப்போகும், பறிபோன பொருள்வாராது,நஞ்சுமீளாது, படுக்கையினின்றெழுந்திரான், அஞ்

றியும் சூனியத்தில் எவனாவதுவந்து எதையாவதுசொன்னானாகில், அது ஒருகாலத்தில் அபத்தமானவார்த்தைகளானாலுமாகும், பூரணத்தில் சொன்னசொல் உண்மையாயிருக்கும். இதல்லாமலும் ஆண்மையாய வென்ன வல்குலையுடையபெண்ணை வந்தவனுடையதிசையும்(௰௨) ங்கவியிற் சொல்லியபடி எழுத்தையுமெண்ணிப்பார்க்கில், அவன் வந்ததிசைசந்திரன்கூறாகவும் முதற்சொன்னசொல் சூரியன்கூறாகவுமிருந்தால், மேற்சொல்லிய காரியங்களுக்குக் கிஞ்சித்மத்திமமாயினு மூழ்மோசமல்ல, இன்னமுஞ்சொல்லுகிறேன்கேள் எ-று. (௰௩)

கருப்பக்குறி கூறுகின்றார்.

கேட்டவனுருயிர்தன்னிலேநிற்றற் கிளர்கையிலுயிருளவைப்பி
டித்துநிற்றல், வாட்டமறவருமதலையிடத்திற் பெண்ணாம்வலமா
கினின்றுரைத்தன்மைந்தனாகு, மீட்டமில்சூனியத்துனாக்கிற்சே
டையாகுமிருஞ்சுழினைமேலுனாக்கிலலியேயாகு, நாட்டுமொ
ழிசூனியம்பூரணத்தேயாகி னடுக்கமுடன் மகவுயிர்க்கக்கிடைக்
குமன்றே - - - - - - *

(இ-ள்) ஒருவன்கர்பத்தைக்குறித்துக் கேட்குங்காலத்தில் வந்தவன் ஒருசீவன்பேரிலேநின்றுகொண்டிருந்தாலும், உயிருள்ளயாதொன்றையுங்கையிற்பிடித்துக்கொண் டிருந்தாலும் ஒருசீவனைத்தொட்டுநின்றாலும், அவனின்றபக்கம்வலமாகில் அதிலும்பூரணமாற்றான் ஆண்பிள்ளைபிறக்குமென்க, இடமாகிப்பூரணமானாற்றான் பெண்ணென்க, அப்படிப்பூரணபக்கமல்லாமல் சூனியபக்கமாயிருந்து எதனைத்தொட்டுநின்றாலும், சும்மாவேநின்றாலும் வலமாகில் ஆண்தான், இடமாகில்பெண்தான், ஆனால்பிறக்கிறபிள்ளைசாகும் அப்போதுசரம்பார்க்கிறவனுக்கு சுழுமுனையாயிருந்தால் பிள்ளை ஆணுருவினதல்லாமலும் பெண்ணுருவினதல்லாமலும் அலியாகுமென்க இப்படியாகவந்தவன் முன்வலத்திலேநின்று அவன்வந்தகாரியத்தைச்சொல்லிக்கொண்டபின் இடத்தில்வந்துநிற்கில் தாய்வயிற்றிலிருக்கிறபிள்ளை வருத்தப்பட்டுப்பின்பிறக்குமென்க-எ-று. அன்றேஅசை.

கெர்பக்குறியும்போர்வெல்லுங்குறியுங்கூறுகின்றார்.

கிடைக்கின்ற மைந்தனுஞ் சூனியத்திற்கேடாங் கெடாதிருவர்
பொருவது சூனியத்திலோது, வடிக்கின்ற மொழியின் முதற்
சொன்னோன்றோற்பனிமருவிய பூரணத்தின் பின்புசொன்னோ
ன்றோற்பன், நடக்கின்றசுழிமுனையில்வெட்டலர்கள்போசீதன
ட்பாகும்வலத்தியங்கநடப்போன்வெல்வன், இடத்தியங்கிலஞ்
சடியோ மெதிர்த்தோன்வெல்வ னிருஞ்சுழினிற்கிலிடரில்லை
யாமே. - - - - - *

(இ-ள்) இதற்குமுன்கவியில் ஞாயிற்றிற்கேட்டயின்னை மரிக்குமென்றும் போர்வழக்குவாதைக்குறித்து ஒருவன்வந்து இன்னவன், இன்னவன், எவன்வெல்வானென்றால்; வந்தவன் ஞாயிறுபக்ஷத்திருந்துசொன்னாலிவ்விரண்டில்முன்சொல்லப்பட்டபெயரையுடையவன்தோற்பன், பூரணமாகில்பின்புசொல்லப்பட்டபெயரையுடையவன்தோற்பன், அப்பொழுதுசரம்பார்க்கிறவனுக்குச் சுழிமுனைநடந்தால் வந்திருவருமொருமித்துப்போவார்கள், இதல்லாமலும் சண்டை, வாது, வழக்குநேர்கிறவனுக்கு, அப்போதுசூரியகலையாயிருந்தால் வெல்வன்-சந்திரனாயிருக்கிறவன்தோற்பன், சுழிமுனையாகில்ஒருமித்துப்போவார்கள், அப்படிச்சந்திரகலைநடக்கப்பெற்றவன்முன் (௰௩-ம்) கவியிற்சொல்லியபடி சரத்தையுள்ளிழுத்துப்பூரணமாக்கிச்சரம்நடக்கிறகாலையே முன்னிட்டெழுந்தடி போய்பின்புநேர்த்தால்வெல்வன்.

சரத்தின்ஸ்பரிசங் கூறுகின்றார்,

பார்க்குங்காலிடமெனினும்வலமெனினுமொக்கும்பஞ்சபூதத்
தியக்கம்பகருங்காலை, சாற்றியதன்னிடஞ்சேரிற் பிரிதிவியாந்த
ப்பாமலப்பினுக்குத்தாழ்வோடு, மேற்றிசையை நோக்கியெ
ழுமங்கிவாயுமெய்புணர்ந்தோர்புறத்தோடு மேன்மைகுன்று*
நீத்துலாயா நாற்றிசையுஞ்சிதறியோடனேவா னென்றுணாத்
திடுநீநிலத்துளோர்க்கே. - - - - *

(இ-ள்) இடை-பின்கலை- சுழிமுனை என்று சொல்லப்பட்ட இம்மூன்றுகலைகளையும் அவற்றின்பயன்களனுபவத்தையும் பரிக்ஷித்துப் பார்க்குங்காலத்தில் ஒத்துவரும், அந்தந்த நாடிகளுக்குள்பஞ்சபூதியங்கள் நடப்பதுண்டு- அவற்றைத்தேர்ந்தறிந்தனுடவிட்டதேயாகும், யாதெனில் மூக்கிலிருந்துவருகிறசரம்அம்மூக்குத்தண்டைச்சார்ந்துவந்தால் பிரிதிவின்கூறென்றறிக, கீழ்நோக்கியோடில் அப்பின்கூறென்றறிக, மேலாகப்பாய்ந்தால் தேயுவின்கூறென்றறிக, அத்தண்டிற்கு நேராகியமத்தொருபுறத்தைச் சார்ந்துவீசினால் வாயுவின்கூறென்றறிக, இப்படிநான்குபக்கங்களுள் ஒருபக்கமல்லாமல் அந்நான்குபக்கமும் கலந்துநடந்தால் அது ஆகாயத்தின் கூறென்றறிந்துஉலகத்துள்ளவர்களுக்குச் சொல்லென்றவாறு - இப்பஞ்சபூதியமிடத்திற்கும்வலத்திற்குமொன்றுதான்-எ-று. (௰௯)

சரத்தின்வடிவமும் நிறமும் அச்சரத்தின் ரசக்கியமும் கூறுகின்றார்.

நிலம்பொன்மையிரத நெடுங்கோணைநான்கா நீளம்பன்னிருவிர
லாநீர்தான்வெண்மை, யிலகுபிறைவடிவுகண்டந் துவர்த்திருக்

குமெட்டிரண்டு விரலேயுடுமெரிதானசெம்மை, நலங்கொண்
டமுக்கோணமழற்சிமேலாய் நாலிரண்டுவிரலோடு நளிர்கருணி
லத், தலங்குபுனியறுகோணமொரு பக்கத்திற்றுய்ய நால்விர
லோடுஞ் சொல்லுங்காலே. - - - *

(இ-ள்) பஞ்சபூதியசாரம்நடப்பதையின்னமெப்படிக்கண்டுதெளியலாமெனில், பிரிதிவுசாரம்பொன்மை, அப்புச்சாரம்வெண்மை, தேயுச்சாரம்செம்மை, வாயுச்சாரம் கருமையாயிருக்கும் (அப்போது கண்டத்தில் எவ்விதவுணர்ச்சியாகுமெனில்) பிரிதிவுக்கு கண்டநித்திக்கும், அப்புவிற்கு துவர்க்கும், தேயுவுக்குஉவர்க்கும், அல்லது அழற்சியாயிருக்கும், வாயுவுக்குபுளிக்கும்- எவ்வடிவாயிருக்குமெனில் பிரிதிவு எண்கோணம், அப்புவட்டுதான், பிறைபோலிருக்கும், தேயு முக்கோணம், வாயு அறுகோணம், அன்றியும் அந்த ஓடுகிற நீட்சியைச்சொல்லுங்கால், பிரிதிவு பன்னிரண்டங்குலம்- அப்பு-௰௬- அங்குலம்-தேயு ௮-அங்குலம்- வாயு-௪- அங்குலம்-என்றறிக, இதல்லாமலும் இக்கவியில், இரதமென்றதனியேபோட்டபடியினால் முதல்இரசமாகவேவைத்துக்கொள்ளலாயிற்று- உலகத்தவருக்குச்சொல்லுங்காலத்தில் இப்பேதங்களையவர்களறிவதுஅரியதென்றுஒரு பூதியத்திற்குநான்குகுறிசொல்லியிருக்கிறார், ஒத்தில்லாவிட்டாலும் மற்றொன்றிலாவதுதெரியவேண்டியது-எ-று. (௰௭)

இதுவும் அதுவுடன் அப்பூதிய நடக்கையிற்செய்
கருமங்களின் குறைகுணங்கூறுகின்றார்.

சொல்லியவான்வடிவதுதான்வட்டமாகுந் துய்யதொருவிரலு
சியெல்லாஞ்சுற்று, மொல்லைநிறம்படிகங்கைப்பிரதம்வாயுமோ
டிவரும் பூதங்கட்குளதோசொல்க, மல்லநில நீர்க்குமிகுபயனு
ஞ்செத்திமத்திமமாம் பகர்காலும்வானுந்திதாம், பல்வளையாய்
சரம்பார்ப்போன் றன்னைப்போற்றி பாங்கிலையென் றுதியிட்டுப்
பணிந்துபாரே. - - - - *

(இ-ள்) ஆகாயபூதியநடக்கும்போதுநிறம்படிகம், இரசமகன்டங்கசக்கும், வடிவுவட்டம், நீட்சிஓரங்குலம், இப்படியாகபூதியங்களின்குறைகுணங்களைச்சொல்லவெனில், பிரிதிவுக்கும், அப்புக்கும் உத்தமம், தேயுமத்திமம், வாயுவும்ஆகாசமுந்திதாம், வளையல்களைத்தரித்தகரத்தையுடையபெண்ணே சரம்பார்த்துக் குறிசொல்லுகிறவனுக்குத் தாம்பூலமுதலானவைகள்கொடுத்து உபசாரங்கள்செய்து பின்கேள், இது இங்ஙனமிருக்க, முன்-௭-௮-ம்- கவியிற்சொல்லியபடி சூரியசந்திரகலையிற்செய்யவேண்டிய கருமங்களும் இக்கவியையனுச

ரிக்கவேண்டியது-௪௮-௪௯-ம்-கவியைப் பார்க்கவேண்டியது, அதிலும்சரம்பார்க்கிறவன் தாம்பூலந்தரித்துக்கொள்ளுகையில் வினவிகேட்கிறவனுக்குஞ்சொல்லுகிறவனுக்கும்நன்று-எ-று. (௰௮)

ஒருவன் பேரைக்குறித்துவினவில் அவனுக்குரியவைகளைக் கூறுகின்றார்.

பாராகுமுதுகுநீர்காலதாகுமைந்தழல்மூரீ பவனைக்கைப்பட
ர்வான்சென்னி, பேராமல்வினவினபோ தூதித்தபூதம்பேர்ப
டைத்தவிடங்களிலேபிழையில்லாமல், லோகும்பூரணமாம்பக்க
த்தன்னிலேறிவெட்டுங்கோல்படுத வீசைத்தலெல்லாங், கூராழி
மால்வந்து விலக்கினுங்குறையாமல் வடுப்படுங்காண் குறிக்கு
ங்காலே - - - - - *

(இ-ள்) முன்-ழ௫-ம்- கவியிற்சொல்லியபடி இருவரைச்கட்டிக்காட்டாமலும் சூனியபக்கத்திலிராமலும், பூரணபக்கமாகவிருந்து சண்டைக்குப்போகிறவன் எவனாவனெனில் ஆயுதங்களினால்காயம்பட்டுவருவானென்றுசொல்க, அதிலும் அப்போது பிரிதிவிநடந்தால் முதுகில்படுமென்க, அப்புவாகில் காலில், தேயுமார்பு, வாயுகை, ஆகாயமாகில்தலையிற்படுமெனச்சொல்க, விஷ்ணுதேவனே வந்துவிலக்கினும் தப்பித்துக்கொண்டுவரமாட்டானென்க-எ-று. (௰௯)

இந்த விந்தைப்பூதியுத்தக் கிந்தவிந்த ஆயுதமெடுத்துப்போருக
வெனவும் அதற்கிவ்விடத்தினிற்கவெனவுங்கூறுகின்றார்.

கால்மூலைதொடங்கியழன்மூலையேறக் கயிறெனவே நீடிமதிகதி
ரோனுக, கோல்மேதுந்தெற்குமதி நிலமாகக்கொள்கவொழுங்க
திரோன்கிழக்குவடக்காகக்கொள்க, சேல்போலுநெடுங்கணுறை
ய்புவிக்குக்கத்தி சேர்ந்தகலப்வாளற்குச் சிலைசானுக்கு, மேற்
றண்டாம்வானுக்காயுதங்கள்லேந்தி விதித்தநிலத்தில்பொருதல்
வெற்றியாமே - - - - *

(இ-ள்) மேற்கூறியபடி சமர்செய்யவேண்டில், வாயுமூலைதொடங்கி யக்கினிமூலையளவாக ஒருகயிறுபிடித்தாற்போற் சரியாய் பாவனைசெய்து, அதில்மேற்கையுந்தெற்கையுஞ்சந்திரன்கூறாகவும், வடக்கையுங் கிழக்கையுஞ்சூரியன்கூறாகவுங்கொண்டு, போர்செய்கிறவனுக்கு அப்போதுசூரியகலையியங்கில் தானச்சூரியன் திசையிற்றானே நின்று, எதிரியைச்சந்திரன்திசையில்நிறுத்திச் சமர்செய்யவேண்டியது-அப்படிச்செய்கையில் (சந்திரனுக்குஞ்சரி சூரியனுக்குஞ்சரியெடுத்தெரியுமாயு தங்களெவையெனில்) சேல்மீன்போலு நீண்ட-

ண்களையுடையபெண்ணே, பிருதிவாகில்-கத்தி, அப்புவாகில்- வாள்,
தேயுவாகில்-வில்,வாயுவாகில்-தண்டு,ஆகாயமாகில்-கல், இப்படியாக
அந்தவந்தபூதியங்களுக்கு அந்தவந்த ஆயுதங்களைத்திவிதித்தபடி அ
ந்தந்தநிலத்திலின்று சண்டைசெய்தால் வெற்றியடைவன்-எ-று. ()

## நோய்க்குறி கூறுகின்றார்.

ஆகியநோய்புருடருக்காய் புருடர்வலங்கேட்கிலாறுமென்கமா
தருக்குமாதரிடங்கேட்கிற்.சோதயிலும் முறைதப்பிற்பொல்லா
தென்கதொலையாது நாட்சென்றுமீளுமென்க, தோகைநிலநா
ட்செலுநீர்கடுகிமீளுஞ் சுடுவழலுமூன்றுதப்பிற் றஞ்சப்ப
ண்ணு,வெகுடுங்காலுமிரண்டில் மிருத்தாத்கொல்லுமெழில்வா
னமன்றுதப்பிலிறக்கும்பின்னே - - - *

(இ-ள்) புருடன்கொண்டபிணிக்காகப் புருடனேவந்து சாம்பார்க்கிறவனைக்கண்டு இந்நோய்லகுவாகுமாவெனவினவிலுமந்நோய்தாவிளையாம்-சரம்பார்க்கிறவனுக்கு வலதுபக்கத்தில்நின்றுகேட்கிலும் நிவர்த்தியாகும்-ஐயமில்லை,ஸ்திரீகொண்டநலிக்காகஸ்திரீயேவந்து வினவினாலுங்குணமாகும்,வந்தவள் அவனுக்குஇடதுபக்கத்தில் நின்றுகேட்கிலுமீளும் சமுசயமில்லை (முன்பதின்மூன்றாங்கவியிற் சொல்லியபடி சூனியபக்கமாவேயிருந்தாலுத்தமம்)இப்படியல்லாமல்ஆணுக்குப்பெண்வந்தாலும் பெண்ணுக்கு ஆண்வந்தாலுமவ்வியாதிதீர்வதுல்லபம்,அன்றியும் ஒருவன்வலதுபக்கத்திலின்று குறிகேட்டுக்கொண்டே இடதுபக்கத்தில்வந்துநின்றாலும், ஒருத்தியிடதுபக்கத்தில்நின்று குறிகேட்டுக்கொண்டே வலதுபக்கத்தில்வந்துநின்றாலும்நோய்போக்குகடினம், ஆயினும்மெல்லென நாட்சென்றுசொஸ்தப்படும்- அப்படியப்படியே சரியாய்வந்துகேட்கிலந்நோய் நீங்குமென்க, அதிலுமெப்போதிருமெனில் அந்நோய்பூதியம்பிருதிவாகில் கொஞ்சநாட்செல்லுமென்க, அப்புவாகில் விரைவிலென்க, அக்கினியாகில்- மூன்றுநாட்களில்விமோசனமாகுமென்க, மிருத்தாற்கொல்லும்-வானமாகில் அன்றைக்கே நோய்புரிந்தாலும்- மிஞ்சில்மறுநாள்டரிக்குமென்க-எ-று. (உக)

இதிலிதின் முன்கவியிற்சொல்லிய வியல்பும் அதன்மேற்கவிக
ளிற் செப்பியபூதியங்களில் குணமும் - முன் - (கூ-ங்) கவியிற்
கூறியபடி சரம்பார்க்கிறவன் ஓரிடத்துக்குப்போக
வேண்டியது - இத்தருணமென்றும் பேசவே
ண்டியது இத்தருணமென்றுகூறுகின்றார்

இறக்குமுபயந்தனைக் கைந்துநாளிலேகினக்காற் சாவில்லையிது
நான்மெய்யே,பிறக்குமொரு பூதத்திலைந்தசம்பிரிந்தோமே

துருவன்பேசக்கேட்டுச், சிறப்புடையயன் றெரிவதல்லானு
லின்செயலதனைற் றேவர்களுந்தெரியமாட்டார், நிறக்குமதிக்கி
ருந்தழைத்தால்வந்ததுகேட்டானிள்வெயிலாச்செல்சொல்க நி
னைந்துகேளே - - - - *

(இ-ள்) இதற்குமுன்கவியிற்கூறிய பூதியங்களினியற்கையாகிய குணங்களுக்குரியவைசொல்லக்கூடாது-அதற்குமுன் (ம-ங்) கவியிற் சொல்லியபடி சுழிமுனைநடக்கில் ஆகுமென்பது ஆகாது, ஆகாதென்பது ஆகும்போல இப்போதும் ஒருவன்நோயைக்குறித்துக்கேட்கும்போது சுழிமுனைநடந்தால் அந்நோயாளிஐந்துதினங்களுள்மரிக்கும், அப்படிமரிக்காமல்தப்பினால் அவனுக்கினியொரு விபத்துவருமளவுஞ்சாவான் இதுமெய்ம்மை - அன்றியும்முன் (மசு-ங்) கவியிற் சொல்லியவண்ணம் ஒருபக்கமோபிங்கலசரத்தில் ஐந்துவகைப்பட்ட பூதியங்களுண்டு-அப்பூதியம் ஒவ்வொன்றுக்குள் ஐந்துபிரிந்து நடப்பனவுண்டு, அவையெவையெனில் ஒருபிருதிவிக்குட்பிருதிவியிற்பிருதிவி பிருதிவிலப்பு, பிருதிவித்தேயு- பிருதிவில்வாயு- பிருதிவில்ஆகாயம்- இப்படி இவ்வைந்துக்குளோந்தாபேதம்- இதனையும் மற்றிந்நூற்பயன்யாவையும் குருமுகாந்தரத்திலறிந்துகொள்வதல்லால் தேவர்களேயானாலுந் தனியேசுருதியைக்கொண்டு குருவைத்தள்ளிச் சுயானுபவம்அல்லது சுயானுபவத்தால் இந்நூலைக்கொண்டே அறியக்கூடாது, அல்லாமலும் சாம்பிராக்கிரவனை ஒருவன்வந்தழைத்தால் அவன் சூரியகலையிலிருக்கும்போதே போகவேண்டியது, பேசுகிறதானாலும் குறிசொல்லுகிறதானாலும் சூரியனியங்கும்போதே சொல்லவேண்டியது- மற்றப்படிகூடாது- பிங்கலைநடக்கின்மத்திமமென்றறிக- இன்னமுஞ்சொல்லுகிறேன் மனதுற்றுக்கேள்-எ-று. (உஉ)

முன் (மகூ ங்) கவியிற்சொல்லிய பூதியசரங்களினியல்பு கூறுகின்றார்.

சேனிதனை நிலத்திற்குநீரிற்குக்குணமாங் கெற்பமெனிலாணாகு
ங்கிளர்ந்தொருவன்கினலி, ஒளின்மிகுலாபங்கள் சாந்திபோக்
குநன்றுதுமங்கிதனி லங்கம்வெல்லும், வாளமரிற் பொல்லாது
கெற்பங்கேடாம்வாயு வெளிற்பெண்ணாகு மற்போர்தோற்கு *
நீள்விசும்பிற்றனுவித்தை யோகத்தாலு நிமிகெற்பமெனில
லியாய்வியும். - - , - - *

(இ-ள்) பெண்ணேகருத்துற்றுக் கேட்பாயாக-முன்- (மகூ-ங்-)கவியிற்சொல்லிய பூதியசரங்களினியல்பு கூறுமிடத்தில், பிரிதிவும்-அப்பும்-தன்மைகளையே தருவன், இதன்பின் (௬௩-ங்) கவியிற்சொல்லியபடி ஐந்துநாழிகைக்குமிஞ்சி நடக்கையிலிவ்விரண்டு பூதியங்கள்

அதிகமாகநடந்தால், லாபமுண்டுவேண்டில் (௰அ-ம்) கவியையும்பா
ர்க்கஅதிங்ஙனம்திறக்க முன்(௰௪-ம்) கவியிற்சொல்லியபடி ஒருபிராணி
யைக் கைப்பற்றுமதும்- அதின்பேரில்ஆர்ந்ததில்லாமலும், தனியே
வந்து சூனியத்திலில்லாமல் பூரணைத்திநின்றுகெற்பக்குறி கேட்டா
ல்அப்போது சரம்பிரிதிவாவது அப்புவாவதுநடந்தால் ஆண்பிள்ளை
பிறக்குமென்க- (௬)வது- கவியிற்சொல்லியபடி சாத்தியன்னுதம்
போக்குவழித்தல் செய்யவேண்டியபோது அங்ஙனஞ் சொல்லிய
கலையில் இவ்விரண்டுபூதங்களிலேதாவது நடக்கும்போதுசெய்தா
ல்பலிக்கும் இதன்றித்தேயுபூதியும் நடைக்கையில போராங்கம்புரி
யில்வெல்லும் அப்போரில்வாளெடுத்தால் மத்திமமாம் அப்போது
கெற்பத்தைக்கேட்டால்அது அழிந்துபோகும்வாயுநடக்கையிற்கெற்
பம்பெண்ணுமென்க, மற்போற்றேலிலையும், ஆகாயமாகிலதிற்க
மர்செயிக்கும் (இப்போரிலக்கணம்) செப்பிய (௨௰-ம்) கவியையும்
(௰அ-ம்)கவியையும்- (௰ம்) கவியையும்பார்க்கவும் (௬-ம்) கவியையிற்
சொல்லிய போகம்புரியதன்மை ஆகாயசரம் நடக்கையில்கெற்பங்
கேட்டால் அலியாய்ப்பிறக்கும் பிறந்துமிறக்கும் என்க-எ-று. (௨௩)

திதிவாரநட்சத்திரக் காலசரபலன் முன்-௪ ம்.கவியிலும்-
௰௫-ம்-கவியிலுஞ்சொல்லியபடி பிராதகாலத்திற்சரம்
பார்க்கவேண்டிய கிறமத்திலும் விசேஷமாய்பார்
க்கவேண்டியதிதுவென்றுங்கூறுகின்றார்.

வியாதபிரதமைமுதல்விளங்கும்பக்கம்விரலிலுமுப்பதிலும்மு
ம்மூன்றாக,மாயாதுவருஞ்சோமனிடமதாகவருகின்றவருக்கலு
க்கும்வலமதாகச்,சாயாதுப்தன்வெள்ளிதிங்கள்மூன்றுந்தப்பா
சந்திரனுஞ்சாற்றுங்காலே,தேயாதுகதிர்செவ்வாய்சனிவியாழஞ்
செங்கதிரோனுமென்று தேறநீயே - - *

(இ-ள்) முன்(௪-ம்) (௰௫-ம்) கவியிலுஞ்சொல்லியபடி பிராத
காலத்தில் சரம்பார்க்கவேண்டிய கிரமத்திலும்விசேடமாய்ப் பார்க்
கவேண்டிய தெதுவெனில், பொழுதுவிடிய (௫) நாழிகையிருக்கை
யில்எழுந்துமேல்' (௪-ம்) கவியிற்சொல்லியபடி சரம்பார்க்கும்போ
துவளர்பிறை பிரதமைக்கும் துவிதிகைக்கும் திரிதிகைக்கும் சந்திர
கலையுதித்துநடக்கவேண்டியது,இப்படிஇம்மூன்றுன்கை பன்னிரண்
டும்போக,தேய்பிறையில் பிரதமைக்குந் துவிதிகைக்குந் திரிதிகைக்
குஞ் சூரியகலையுதித்து நடக்கவேண்டியது, பொழுதுவிடிய(௫) நா
ழிகையிருக்கையிலுதித்தசரம் மற்றவைந்துநாழிகையுங் கலங்காதோ
டவேண்டும்,திதியோகவாரங்களிலெவை நிகழவேண்டியதெனில் ஞா
யிறுக்குஞ் செவ்வாய்க்குஞ் சனிக்கும்வியாழத்திற்குஞ் சூரியகலையுதி

த்தோடவேண்டியது, திங்களுக்கும்புதனுக்கும் வெள்ளிக்குஞ் சந்திரனுதித்தோடவேண்டியது இப்படியுதிக்குஞ்சரம் எந்தபூதியத்திலுதிக்கவேண்டியதெனில் பின் (௬௫-ம்) கவியைப்பார்க்க வேண்டியது, இதில்பூதியங்கள் அதிகமாய்க்கதித்தோடில் பயன்கள் என்னவையாமெனில் முன்(௨௩-) கவியிற்றெரியும், அன்றியும்விபரம் (௩௩-ம்) கவியிற்காண்க-எ-று. (௨௪)

இதனுள்நட்சத்திரங்களுக்குநடக்கவேண்டியகாலசரமும்
தன்மேற்கவியிற்கூறிய வாரங்களுக்குரியனவாகியகால
சரங்கள்சரிவரில்இடரில்லை பிழைக்கின்வினைவிளை
நிகழுமென்றுகூறுகின்றார்.

தேறிடுநீயொன்பதுநாள்பூரமாதி சிறந்தரோகணிசதையமுத்தி
ரட்டாதி, கூறிடுஞ்செங்கதிரோனுளாகக்கொள்ககூறுநாளடைய
மதிக்கென்றுகொள்க, விறிடுஞ்செங்கதிர்பிழைக்கிநோய்காரிக்
குமிடித்திடு மண்டலஞ்செய்க்குவெம்போர்சாவாம், பாறிடும்
பொன்பிழைக்கின்மன்னர்கேடாம்புந்தி பதிக்கதிபன்கெடுமிந்
துகிளைஞர்பார்க்கே - - - - - - ௲

(இ-ள்) பெண்ணேதிவாரமென்று இரண்டுவேறு பாடாய்க்கூறிலுமென்று தியக்கம்வேண்டியதில்லை, விபரம் மேற்கவிகளிற்றுனேசொல்லியிருப்பதைக்காண்க. இவ்விரண்டினுடன் கீழ்வரும்நட்சத்திரபலனுகிய மூன்றினுள்ளும் எதேதுகஷ்டமோ அதிலும் எதேது இஷ்டமோ தெரிந்து- அதிலும்-லீக்கந்தூக்கம் நோக்கிப்பார்ப்பதென்றுகாண்க, கண்டுதேறியிருஅஃதுநட்சத்திரங்களுக்கு நடக்கவேண்டிய காலசரமாம், எதெனில்-பூரம்-உத்திரம்-அஸ்தம்-சித்திரை-ஸ்வாதி-விசாகம்-அனுடம்-கேட்டை-மூலம்-உரோகணி-சதயம்- உத்திரட்டாதி - இப்பன்னிரண்டிலுஞ் சூரியனடக்கவேண்டுமெனக் கொள்க, மற்றப்பதினைந்திலுஞ் சந்திரனடக்கவேண்டும் அல்லாமலும் மேற்கவியிற்கூறியவாரங்களுக் குரியனவாகியகாலசரங்களில் ஞாயிறுதப்பில்-வியாதி, சனி-வறுமை, செவ்வாய்- சண்டை, சாவு வியாழம், தன் மன்னனுக்குக்கேடாம் புதன், அவ்வூரதிகாரிக்குக்கேடு திங்கள், சுற்றத்தாருக்குக்கேடுவரும், (தன்மன்னனென்பதும், அவ்வூரென்பதும், சரம்பார்ப்பவனுக்குரியனவாம்) (வெள்ளிபின்கவியிற்காண்க) சனி-வருமையுடன்தன்கையிலிருப்பதும்போகும், பொன் பிழைக்கில்மன்னர்கேடாமென்பதில்தன் தாதாவிற்குவருத்தம்வரில் தனக்கு எப்படிப்பொருள்வரும்வாராதுபதிக்கதிபன்கேடுமென்பதில் அவனிவனால்பறிகொடுக்கப்பட்டானெனவரும்-எ-று. (௨௫)

இதன்மேற்கவியிற்கூறுதவெள்ளிபிறைக்கில் நிகழ்வன விவையெனவும் மற்றதன்மேற் கூறியதிதிபிறைக்கில்நிகழ்வன விவையெனவுங் கூறுகின்றார்.

போக்கரியபுகர்பிறைக்கி லூர்விட்டேகல் பொருந்தியதோர் மெய்ந்நோதல்புணர்ந்தோர்சாதல்,லாங்கமதிலிடராமுற்பக்கந் தன்னிலருங்கலகமிரண்டாகிலர்த்தநாச, மூக்கமுடன்மூன்றத னிற்போக்குண்டாகுமுனாத்தநான்கிற்கிளைஞர்க்குறுநோயுண் டாந்,தேக்கியவைந்திற்றேசமவேபுமாறிற்செகந்தரசர்கெடுமே ழிற்சேருநோவே. *

(இ-ள்) வெள்ளிதப்பில் தான்வசிக்கும் பதியைவிட்டு ஒழிந்து போதலாகவேணும்அவ்வெல்லையைவிட்டுமற்றொரெல்லையைப்போ ய்மிதிப்பதாகவேணும், தேகநலிவரும், தன்மனைவிக்கு சாவுவரும், (சாவென்பதில் சண்டைபிணக்கு நோய்முதலியவருத்தமாதலையும் சதிபதிகளுக்குப்பொருத்தம்போதலையுங்காண்க) நூலாசிரியர்புண ர்ந்தோர்-சாதலென்றும்-சாமுடிவளாக்கும் வருத்தம்வருமென்றுந் துணிந்துகூறினமையால் நன்மையைதேவராக அட்டமாசித்தி மட் டும்பெருக உண்டாகுமென்றகருத்துக்கண்டு இதன்மேற்கவியில்கூ றியதுகாண்க-மற்றதனிற்சொல்லியபடி ஊருக்குமன்னனுக்கும்அ திகாரிக்கும்வந்தாலும்வரும் இதன்றியில் வளர்பிறைகாலத்தில் பிரத மைதப்பில் யாதேனுமிடர்வரும்,துவிதிகை-கலகம்-திரிதிகை-பொ ருட்சேதம், சதுர்த்தி-போக்குண்டாகும் (சகலவிதநஷ்டத்துக்குங் காண்க)பஞ்சமி-பந்துக்களுக்குவியாதி,சஷ்டி- அத்தேசத்தாருக்கு ம்அரசனுக்கும்வருத்தம்,சத்தமி-நலி, அரசனுக்குந்தேசத்தாருக்கு மேயுண்டு- தனக்கில்லையென்றேமாந்திருத்தல்கூடாவாகும்- தன்னு லேயவர்களுக்குவருத்தம்வந்ததென்ற அவதூறுன பொச்சாப்பினு லாவதுதான்வருத்தப்படவருமென்றவிவரம் மேற்கவியிற்முன்னெசெ ப்பியிருப்பதனைக்காண்க-எ-று. (உரு)

திதிபிறைக்கில் நிகழ்வனவிவையென்றும் சந்திரசூரிய ரியல்புங்கூறுகின்றார்.

நோவுடனேசாவுமாமெட்டாகின்மற்றைநுவலாத பக்கமுமிம் முறைமையகொள்க- தாவில்வெங்கதிரவனின் மதியமுண்டாஞ் சந்திரனுள்வெங்கதிருந்தப்பாதுண்டா மேவரியவிவர்களையே தேவர்பிரானுரைத்தருளவுமையாள்கேட்டச் செவ்வியிதன்மு றைமைதனைத்தெளிந்துமேதே. *

(இ-ள்) அஷ்டமிபிழைக்கில்நோவுடன் சாவும்வரும், வளர்பி
றையிங்ஙனமிருக்கத்தேய்பிறைக்குமிம்முறையேகொள்வது- இதெல்
லாமலும் சூரியனுக்குள் சந்திரனும் சந்திரனுக்குள் சூரியனுமொ
ன்றுக்குளொன்று கலந்துதோன்றுவதுமுண்டாம், உடையவன்தன்
சுயவல்லமையினால் தெரிந்துகொள்ளத்தக்கசிறப்பினதாகில்இந்நூ
லையார்தான் தம்மாற்றாமே தெரிந்துகொள்வார் கொள்ளமாட்டார்
கள்ஆதலாற்குருவருளினாற்றெளிக. எ-று. (௨௭)

மேற்கவிகளிற்கூறியசரம்பிழைக்கில் இடர்வரும்
வந்தாலும் அதற்குஉபசாந்தங்கூறுகின்றார்.

தெளிகதிர்செய்மூன்றடியாந்தெற்குமந்தன்செம்பொன்மூன்
றடிமேற்குத்திங்கள்வெள்ளி, யிளகியநாலடிவடக்குப் புந்திமு
ன்பாலிரட்டையனுகிழக்கிரவி யெழுதன்முன்னே, வளமுட
னேபூரணபக்கத்திற்சென்றுவந்திருந்துநமைநினைந்துவழுத்த
ல்செய்தே, வுவமகிழ்ந்துபோகிலெல்லாம்பலிக்குந் துன்பமு
ண்டாகவிலவயனத்துமுணர்ந்துதேறே. - *

(இ-ள்) பெண்ணே மேற்கவிகளிற்சொல்லியபடிகாலசரஞ்சரி
ப்பட்டுவருமோவராதேஊழ்வினைப்படிக்கல்லவோநடக்கும்அதை
நம்முடையவசமாக்குதற்கு இலேசோவெனத் தளர்வுற்றிருக்கவே
ண்டியதில்லை சரம்பார்க்கிறவன் முன்கவிகளிற் சொல்லியபடிபிரா
தகாலத்தில் அருணோதயத்திற்குமுன்னெழுந்து ஞாயிறுசெவ்வாய்க்
கிழமைகளுக்குத்தென்புறமாய்மூன்றடி (முன் யக ந்)கவியிற்சொல்
லியபடி சரத்தை பூரணமாக்கி யக்காலையே முன்னிட்டுக்கொண்டு
போகவும்சனிவியாழங்களுக்கு மூன்றடிமேற்கேபோகவும திங்கள்
வெள்ளிக்கு நாலடிவடக்கேபோகவும் புதனுக்குஇரண்டடிகிழக்கே
போகவும் இப்படியாகப்போய்வந்து ஒருதிவ்வியமாகிய ஆசனத்தி
லிருந்துஎன்னைநினைத்துத் துதிசெய்துபின்னெழுந்து எங்கெசென்றா
லும் அல்லது எங்கேயிருந்தாலும்முற்கவிகளிற் கூறிய துன்பங்கள்
யாதேனுமடாராது எ-று. (௨அ)

இதன்மேற்கவிகளிற்கூறிய ஒருவாரத்திற்குச்சரந்தப்பில்
இன்னவையாமெனவும் ஏழுநாட்களுஞ் சரிவரில்
இன்னின்னவையாமெனவுங் கூறுகின்றார்.

தேறுநீஇவையெல்லாஞ்செவ்விதாக செங்கதிரோன்றன்னாளிற்
றிங்களோரடி, மாதிவருங்கதிரவனுஞ்சோமனுளின் மறிந்தோடி
வருங்கிழமையெழுமாதிற், கூறுபடவுடலுயிர்விட் டேகுமெ

பாடில்லாமல்நடக்கவேண்டியது-நடந்தாலிவ்வுலகமெங்கும மெச் சத்தக்ககீர்த்திவந்துறும.மற்றுமமுன் காலசரஞ்சொல்லிய கவியை நோக்கவேணடியது-எ-று. (ருக)

குறிசொன்மார்க்கங்கூறுகின்றார்.

நடப்புடையவொருவ னெங்கென்றொருவன் கேட்பதி ஞனி
லத்திலகத்திருப்பனன்னீர்முற்றம், அடக்குமழூவாகிலுள்ளு
ரீவாயுவேற்றாரம்பலமேன்மலையேறற்றுயிலாகுமவிடப்போ
ஞன்புவிக்குநிலைநீர்க்கு மீண்டான் வெவ்வழற்கு வருகின்றான்
வெயில்காலுக்கு, மடற்குழலாயூர்வந்தான் வானமாகில்வருவ
னொருநாழிகையின்மாநிலாளே. *

(இ-ள்)ஒருவனவந்து இனனுனெங்கேயிருக்கிறானெனில் அப் போதுசரமபிருதிவாகில்வீட்டுக்குள்ளிருக்கிறான அப்புவாகில்முற்ற த்திலிருக்கிறான,வாயுவாகில்எல்லைக்கப்புறப்பட்டான,ஆகாயமாகில் மலையேறுகிறான அல்லதுதூங்குகிறான் என்றுசொல்லவேணடியது. புறத்தேசமம்பானவனைக் குறித்துக்கேட்டபோது, பூதியமைந்தில் முதலாகில் அவ்வூரில்தானேநிலையாயிருக்கிறான,இரணடாகில்திரும் பிவருகின்றான,மூனறாகில்திரும்பினவனநில்லாமல்நடந்துவருகிறு ன,நாலாகில்அவனிருக்கு மூருக்குள்வந்தான, ஐந்தாகில்ஒருநாழி கைக்குள்வந்துவீடுசேர்வானெனறு சொல்லவேணடியது-எ-று. ()

இச்சரம்மனதுடனலயப்பட்டால் இன்னவையாமெனக் கூறுகின்றார்.

மாறிவருவாயுமிரேவலயநதனனினமரிக்கவுயிர்சித்திநிற்கவது
தானிற்குங், கூறுசமயங்கூற்றாற்பயமுமில்லை குறித்திருமண
ஞெனறனைநாழிகையாக்கொள்க,தேறுபுனற்கொனறேகால்வ
னனிக்கொனறுசீவனமூக்கால்வானமறைசிறந்தநாடிபாருமை
ந்துநாழிகைக்குள்வரினற்குனநிற்பழுதுபடுமுடமபிலிதுபற
றிப்பாமே - - - - - - *

(இ-ள்)இடதுபக்கத்திலுமவலதுபக்கத்திலுமஒனறைவிட்டொ னறைமாறிமாறிநடககுமிச்சரமானதுதேயத்தினுடேலயபபட்டுப் போகுமேயானுல் பிராணனுக்கழிவில்லை,அப்படிலயப்பட்டு நிற்கி கில்மனமுதலிடவந்தக்கரணங்களுக்குமவேலையில்லை அசைவற்றிருப் பனவாகும,பினபு மற்றெச்சமயத்தாராலுமபயமில்லை யமனுலும பயமில்லை முனசொனனபடி பிடதுபக்கமும வலதுபக்கமும மா

றியோடுஞ்சரம் ஒவ்வொருபக்கத்திலென்னேரந்தரித்து நடக்குமென்னில் ஐந்துநாழிகையாம், அதிலும்பூதியங்களின்கூறுக்கெவ்வாறு பகுப்பமெதனில் மண்ணில்ஒன்றரைநாழிகையும், நீரில்-கவ-ம், நெருப்புல்-க-ம், காற்றில்-ஙு-ம், வெளியில்-உ ம்ஆகநிறைந்தோடும், இப்படியாகியபூதியங்கள் கூறுகொண்டஐந்துகடிகைகளும் ஒவ்வொருபக்கத்திற்குச் சரியாய்ச்சிதையாதோடவேண்டியது இதைவிட குறைந்தாலும் வளர்ந்தாலும் தேகநலியாம், இச்சரம்லயப்படும்வழிதேடவேண்டியதுதேடில்முன்கண்டபயனுண்டாம் இல்லையேல்நாடியொன்றுக்கு ஐந்துநாழிகையும் பூதியங்களளவேசிதறாமல்நடப்பிக்கவேண்டும், அதுவுமின்றெனில்தேகநலியேவரும்-எ-று. (௫௫)

தத்துமவாழ்நாட்பிரமாணமறியும்படிஅயன்
சங்கற்பங்கூறுகின்றார்.

பற்றிநாஞ்சொன்னபடியயன்முன்னாட்பகலொருபோதுண்டு
பரிசுத்தனாகி மற்றைநாளுத்தரமாமயனந்தன்னின்மாறியிடந்
தனிலோடும்வலந்தெற்காகும் பெற்றதோரு நாழிகைதானைந்
துநூறும்பெருங்கடிகைதனிற்குறையிற்பிராணனுசு- முற்றொ
ருமாநாழிகைக்கோராண்டு தாழுமுறையேநான்சொன்னகண
க்குண்மைதானே. *

(இ-ள்) சரம்பார்க்கிறவனுக்குச் சென்றநாட்கள்போக மற்றும்நின்றநாட்கள் எவ்வளவோஎன்னுங் கருத்துகொண்டு பார்த்துத்தெளியுமாறுயாதெனில், அயநசரமாம், அதனைப்பார்ப்பதெவ்வாறெனில் தைமாதமுதற்றெதியில்உத்தராயநகாலம், ஆடிமாதமுதற்றேதியில் தட்சணாயநகாலம், இவ்வயநகாலத்திற்குமுன்னாள்பகலில் ஒருபொழுதன்னமுண்டு தத்துவங்களைப்பரிசுத்தமாக்கித் தேகமெலிவதனால் மனதுக்கும் மற்றவாயுவாதிகரணங்களுக்கும் வருமிடையூறினைநிருவி தைமாதமுதற்றேதியில் பொழுதுவிடிய ஐந்துநாழிகையிருக்கையில்பார்க்கும்போது சரம் வாரம் திதி நட்சத்திரங்களைத்தள்ளி இடதுபக்கத்திலுதித்து முன்கவிகளிற்சொல்லியபடிஐந்துநாழிகைகளுஞ்சிதறாமல்ஓடுமதனைப்பார்க்கவேண்டியது-இதுபோகஆடிமாதமுதற்றேதியில் இதேபிரகாரமாய்ப்பார்க்கவேண்டியது அப்போது சரம்வலதுபக்கத்திலோடும் அப்படியோடியசரம்முற்கூறியவண்ணம் ஐந்துநாழிகைகளுஞ்சிதறாமலோடினால் சரம்பார்க்கிறவன்தான்செய்யும் பிராணாயாமவுதவியினால் அன்றுதொட்டுவரும்நூறுவருஷகாலம்வாழ்ந்திருப்பன், இதுவன்றிகுறைந்தால்அவ்வைந்துநாழிகையை நூற்றொருமா ஐந்தாகநூறுக்கிக்குறைந்தநாழிகை ஒருமாவோஇரண்டுமாவோ அல்லததன்மேற்றொகைப்பட்டவை

போ அதற்கு ஒவ்வொருவருஷத்தைக்கூட்டிப்பார்த்து குறைந்தவொவ்
வொருமாநாழிகையின்பேரில் கணக்காக்கிக் கொள்ளவேண்டியது,
முழுவதுமேதப்பிச்சரம் இடத்திற்கு வலமாகவும், வலத்திற்குஇட
மாகவும்ஓடில் அவனுக்குச்சீனகாலமென்றறிக எ-று. (௭௪)

போஜனவிதிகூறுகின்றார்.

உண்பவனுக்கப்புலிடமதிக்குவெய்ய வுவத்தனலகைத்தனகார்த
லுண்கபூன்னே, பண்பயில்செங்கதிர்க்கு நெய்பால்புளித்தல்
கன்னலபாகுடனேதுவர்த்தனமுதுண்டபார்க்க, நண்பமையு
வயிற்றிற்குச்சாறுபாதிநன்னீர்கால்காற்றுக்காலாகநல்கி, நண்
பயிலுடிகள்சுத்திபண்ணிதூபங்காட்டிமலர்சூட்டியிருள்கழியு
ங்காலே. - - - - - *

(இ-ள்) முன்கவியிற்சொல்லியபடி சரம்பார்க்கிறவன்சூரியகலை யியங்கிவருகிறமட்டும் போசனமில்லாமல மறறதனுக்காக கார்க்க வேண்டியதில்லை சந்திரனடக்கும்போதஞ் சாப்பிடலாம், எப்படி யெனில், உஷ்ணமானபண்டங்களும்-உப்பு-கசப்பு- காரலாகியப ண்டங்கள்வைத்துக்கொண்டு தாகபானத்தைநிறுத்தியுண்ணவேண்டி யது சொல்லியபடியேசூரியநடக்கில்-நெய் - பால்-புளித்தல்-தித்தி த்தல் துவர்த்தலாகிய பணடங்களுடனேசாப்பிடலாம்தாகபானமு மப்போதேசெய்யலாம் சந்திரனுக்குஅப்போகூடாதாயினும்பின் யுசூரியனடக்கில் சாப்பிடவேண்டியது, இதுமாறினாலும்ஆத்திரத்தி னாலும்அவாவினாலுஞ் சூரியனுக்காககாத்திராமல்அடுத்தடுத்தச்சந் திரனிற்றனே தின்றுகொண்டுவந்தாலும்நலியாம் இப்படியாகச்சா ப்பிடுகிறதாயினும் அவ்வளவு வயிற்றிற்குப்பாத்தாளாகும் மிஞ்சில ாது, மற்றம்பாதிக்குச்சலங்காலாகவும் வாயுகாலாகவுங்கொள்ளவே ண்டியது, கொண்டுதசநாடிகளையும் பிராணயாம முன்னிலையில்சுத் திசெய்து ஏகாக்கிரசித்தனாய்ச் சரம்பார்க்கவேண்டியது-எ-று. ()

சரத்தைஎறவொட்டாமலுங்குறையவொட்டாமலு
ந்தன்வயப்படுத்திக்கொள்ளுமார்க்கங்கூறுகின்றார்

காலகொண்டுகணக்கறிவார்க் கியாதுந்தப்பா கருதியவெல்லா
முடியுங்காண்போர்க்கெல்லா, மேல்கொண்டபுவியுடனேயப்
புவன்னிவிளம்பியகால் வானமுடன்வின்வுவாற்குப், பால்கொ
ண்டமொழியாளேபவனங்கட்டிப்பற்றியவாராதாரப்பரிசுபா
ர்த்துச், சால்கின்றமுதனுடிதன் னுள்நின்றதபனன்மதிசெந்தழ
லாத் தன்னைப்பாரே. - - - *

(இ-ள்) பால்போலுமினிய சொல்லையுடைய பெண்ணே, சரம் பார்க்கிறவனுக்கு அநுபவமிந்நூற் சொல்லியபடிவருமோ மற்றவ் விதிப்படி பிறழாது போசனமுறைமையுமவற்றொத்துக்கொள்ளுமோ மிகினுங்குறையினும் நோய்செய்யுமே எளிதிற்சிரிப்படைவாதேவராதெனில் தானெப்படி நன்கடைவல்லினவுவார்களுக்கெவ்வாறாய் நன்றெனவுந்தீதெனவுமுறைத்தெடுத்தோதுவமென்றுஐயமுறவேண்டியதில்லை (சரம்பார்ப்பான் பாட்பார்ப்பானென்பதுபோல் சரத்தைக்கணக்கின்படியறிந்து பார்க்கிறவனுக்கு யெந்தகாரியமானாலுந் தப்பிப்போகாது அவனைக்கண்டபேர்களுக்கும் நினைத்த காரியமெல்லாமுடியும் அதெப்படியெனில்-பிரிதிவு-அப்பு-தேயு-வாயு-ஆகாயமாகிய பஞ்சபூதியங்களின்கூறுகூடியவாயுவினைப்பாழ் போகாமல் மனமறிவுடனேகட்டி ஆராதாரத்தினிலுள்ளபரிசினையறிந்து தசநாடிகளிலுமுதநாடியாகிய பிராணநாடியினின்றுமற்றந்திருத்துதித்தோடுஞ் சந்திரன் சூரிய வன்னியென்னுமிம்மூன்றினுடையகுணங்களையும்பார்த்தால்கைக்கனிபோல லேசிற்றெரியவரும்

சரம்பார்க்கிறவனுக்குநன்மைதீமைமரணகாலமறியும்படிசாயாபுருஷதெரிசனங் கூறுகின்றார்.

பாரிலொத்தநிலத்தகல்வான் கரங்களற்றாற்பத்தடிக்குளஞ்சடி
யாம்வருவத்தன்னிற், சிரியமெய்ந்நிழல்கழுத்துகைகால்மசன்
னிசிமிட்டிப்பார்த்திமையாமற்றிகழ்வான்பார்க்கிற்கூருருவம்
பொன்கண்டாற்செல்வம்வெள்ளைகுறைவிலுயிர்மெய்ம்மையு
யிரிளைக்குங்குற்றம், காருருநோயாறுபிலறைகைகால்குன்றிற்கண்
குறையின்மூற்பிறையிற்காட்டுஞ்சாவே *

(இ-ள்) பூமியிலேமேடுபள்ளமில்லாதஇடத்தில்ஆகாயத்தில்மேகமறைவில்லாமல்வெயில்காயும்போதுதன்னிழல்அஞ்சடிநீளமுதல் பத்தடிக்குட்பட்டதருணத்தில்தான் அந்நிழலைமுகமாய்நின்றுகைகளிரண்டையுந்தொங்கவிட்டு கண்களியாமல் அந்நிழலில் தலைகழுத்து-கைகள் கால்கள்- இவ்வுறுப்புகளிலொன்றைப்பார்த்து அப்படியேஇமையால்ஆகாயத்தைப்பார்த்தாலங்கே அவனுருவந்தோன்றும்அவ்வுருவம் பொன்னிறமாயிருந்தாலவனுக்குச் செல்வம்வரும், வெண்மையெனில்பிராணபயமில்லைஆயுள்வளரும், செம்மையாகில் ஆயுள்தேயும அதற்கொருகுறைவுமவரும், கருமைபேல்நலி, இதுவன்றி அவ்வுருவில் கைகளாவதுகால்களாவதும்தான்றாமலிருந்தால்ஆறுமாதங்களுள்மரணமிதுவன்றித்தலையேகாணாமல்வேறுதமாய்த்தோன்றல்மூன்றுமாதத்தில்மரணம, இதல்லாமலுஞ்சந்திரனிலுமிப்படியேபார்ப்பதுமுண்டுஇதனைமாயாபுருஷதெரிசனமென்றுஞ்சொல்

ஆவார்கள், இச்சாயாபுருஷ தெரிசனத்தைவிடாமல் பன்னிரண்டு புருஷமபார்த்துக்கொண்டுவந்தால் தன்முன்னிற்குமந்நிழல்தன்னிடனேபேசுமபேசில் அதன்முகாந்தரமாய் அஷ்டமாசித்தியையுமபெறலாகும பெறுவதன்றிப்பின்னுஞ்சிலநாட்களில் அந்நிழல் ஓராளுருவமாகித் தன்னுடனேதிரியும படுத்தால்தானுமபடுக்கும எழுந்தாலுடனெழுந்திருக்கும இவனுக்குவருமநன்மைதீமைகளை முன்னதாகவுணர்த்தும இன்னமிப்படிப்பட்ட அனேகமற்புதங்கள்விளைக்குமெனறு பெரியோர்சொல்வார்கள்-எ-று. (௬௭)

மரணவிலக்கணமவில்லுருவினபயனகூறுகின்றார்,

காட்டியகானிழற்றனக்குமுனபினனுகக்கடிபுனல்வாய்கொனட
கல்வானகளங்கமற்றால், பூட்டியநீர்துகள்பிறக்கவுமிழ்ந்தால்
வானிற்பொருந்தியவில்லைந் துருவாய்ப் பொலிந்துதோனறு,
மீட்டியவில்லுருவுளதேலாண்டுவாழ்வனிதுமுறியிலவ்வாணடி
னிறந்துபோவான, கோட்டியவில்லுருமுறியவணங்குதோன
றிற்கொணடுபோமபிறையாறிற்குறித்துக்கூற்றே. - - - *

(இ-ள்) வானிற்களங்கமில்லாமல்சூறியனெறிக்கையில்மரநிழல்வீட்டுத்தாழ்வாரநிழல் இப்படிப்பட்டயாதொருநிழல்தனக்குமுனவிருக்கச்சரமபார்க்கிறவன பினனினறுவாய்நிறைய சலங்கொணடு அந்நிழலருகில் துகள்பறந்து அணுப்போலப்பறக்க ஒரோவரமாய் உமிழ்ந்து அத்துகளைப்பார்த்தால் அதிலிந்திர தனுசு ஐந்துவர்ணங்களுடனேதோனறும தோனறில்பார்க்கிறவனுக்கு அனறுமுதல்ஒருவருஷமட்டுக்குஞ்சாவில்லை, அவ்வில்முறிந்துதோனறிலவ்வாணடிற்றனேமரணம அவ்வில்நிறமாறிஅங்கனே ஒருபெணணுருத்தோனறில்-ஆறுமாதங்களிறப்பன-எ-று. (௬௮)

சந்திரசூரியனைப்பார்க்குமிலக்கணங்கூறுகின்றார்.

குறிகொணடநிறைமதியங்குறைமதியந்தனனிற்குலவியதோர்
செப்பகலிற்கோநெய்யைவிட், டெறிகினற மதிக்கதிரைப் பகற்கதிரைப்பார்த்தாலியல்வணமை செமமைபொனமை பசுமைகறுப்.
பெனனினெறிகொணடவுயிர்வாழ்வுகெடனேய் சாதனிறைநிறையே
யறியிதனிற்றெற்குமேற்கு-மறிகினறவடக்குடனேகிழக்குநடுகுறைத்தாலாணடுதிங்களாறு மூனறெனறுநாட்பத்ததிலவே - *

(இ-ள்) ஒருசெப்பகலில்பசுவினநெய்யையுருக்கிவிட்டு அதிற்பூரணசந்திரனையல்லது அமாவாசையினபோது சூரியனைப்பார்த்தால் அதிற்றோனறுகினறசந்திரன-அல்லது-சூரியனவெணமைசெமமை

பொன்மை,பசுமை,கருமை, இவ்வைந்தில் ஒன்றுளதாய்த்தோன்றும், அதில்வெண்மையேல்பிராணபயமில்லை, செம்மையெனிலவாழ்வுண்டாம்,பொன்மையாகில்கேடு, பசுமையானால்நோய், கருமைசாவுவரும்,அதிலுமப்படிச்சாகிறவனுக்குக்காலமெப்போதெனில்தென்புறவட்டங்குறைந்தால்ஒருவருடம்மேற்புறவட்டங்குறைந்தால் ஆறுமாதம்,வடபுறம்மூன்றுமாதம்,கீழ்ப்புறம்ஒருமாதம்.நடுவேதொள்ளையாயிருந்தால் பத்துநாள்நிறைமதியம் பௌரணைகுறைமதியம்அமாவாசையென்றறிக-எ-று. (௫௬)

சரீரபழுதுமுதலான மரணவிலக்கணங்கூறுகிறார்.

அளிந்திடுங்கைகாலெணற்றிகன்னந்தம்மிலடர்ந்து துடிப்புறிவாண்டுதிங்களாறு, மொழிந்ததிங்கண்மூன்றுநாள்பத்திலாவிமுடிந்துவிடும்திதுவொழியசெவியிலோசை,யொழிந்திடுமேளழுகண்ணிலொளிதானைந்தா, முயர்ந்தமணமூன்றிரண்டிலுரைவேறுனால், கழிந்திடுநல்லுயிரொன்று கருதியீசன் கழலிணையைப்போற்றில்வினைகழிந்துபோமே. *

(இ-ள்) கை-கால்-நெற்றி-கன்னம்-இவைஅடர்ந்து துடித்தால்-மரணகாலம்வந்ததென்றறிக-அதிலும்கைதுடித்தல்ஒருவருஷம், கால்ஆறுமாதம்,நெற்றிமூன்றுமாதம்,கன்னம்பத்துநாள், என்றுகொள்ளவேண்டியது,இதுவொழியகாதுகேளாவிட்டால் ஏழுநாளில்மரணம் கண்பார்வைமழுங்கில் ஐந்துநாள், மூக்கில்கந்தம்போனால்மூன்றுநாள்,வாக்குகுழறிப்பேச்சழிந்தால்இரண்டுநாள்,இதையறிந்து கடவுளுடையபாதங்களை நினைந்துபோற்றிசெய்தால் வினையென்பதிராது அங்ஙனேகலந்துபோதலுமாகும்-எ-று. (௫௭)

உசுவாசநிசுவாசங்களின் பயனுங்கூறுகின்றார்.

போம்வாயுசிவமுள்ளேபுகுதற்சத்திபோகில்விடம்புகிலமுதம்புகன்றவெல்லாம், ஆம்வாயுபுகிற்போகி லல்லவாகுமடங்கில்விடங்கெடும்போகிலகலும்பா,வதேமேவுசத்தியிரண்டொற்றையீசன்செவியிற் போவார்வருவர்சரமீளுமாகில்,ஓமேவுமுயிர்போகிறேயாமற்றநுட்புகிறேயாகாமெய்யுரைத்தோநாமே.

(இ-ள்) உசுவாசம்நிசுவாசம் அல்லதுரேசகபூரக காலபலனைச்சொல்லுமிடத்தில் உட்கொவிட்டுப்போகிறவாயுவேசிவம், உட்புகுவதுசத்திசரம் வெளிப்பட்டுப்போவதெல்லாம் விடமுண்பதற்குச்சரி, உட்பட்டுப்புகுவதெல்லாம் அமுதமுண்பதற்குச்சரி, சரம் உள்ளேபோகும்போது ஒருவன்சொன்னது அல்லதுநினைந்த காரியம் ஆகும், வெளிகொள்ளுகையில் ஆகாது, அந்தவாயுகும்பகத்தடங்கி

ல்உண்டவிடங் கெடுமெனச்சரி அடங்கியது நடுநாடி வழிபோகில் பாவமென்பதில்லை இதன்றியில்ஒருவன்வந்து குறிகேட்கையின்முத ற்சொன்னசொல்லின் எழுத்தையெண்ணிப்பார்க்கில்ஒற்றையாகில் சிவன்கூறென்றும், இரட்டையாகில் சத்திகூறென்றுங் கொள்ள வேண்டியது,சரம்வெளியேபோகும்போதுஒருவன்வந்துஇன்னான் போவானோ வருவானோவெனில் போயானவரான் உட்புக்கையில் வருவான், சரம்போகும்போது வருவனோவென்றும் புகும்போது போவானோவென்றும் மாறுபாட்டுவினவில் சரிப்படாது, போகும் போது போவானேயல்லது வரான்,புகும்போது வருவானேயல்ல துபோகான்,சரம்போகும்போது நோய்தீருமோவென்னில் தீரா து,புகும்போதுதீருமென்க-எ-று (சுக)

குறிசொல்லவும்போர்புரியவுமார்க்கங்கூறுகின்றார்

உரைத்தொருவனிறைவிற்போய்சூனாவிலுறத்தீதாம்உயிரில்பு
றத்தரைத்துநிறைபுறத்துறமத்திமமாம் நிரைத்தநிறைபக்கத்
தினின்றிடி னன்மையதாம்நிறைமதியந்தனி லேகிநேர்ந்திடும்
போர்க்களத்து வுரைத்தசெழுங்கதிர்வெட்ட வல்லவனேதோ
ற்பன்வுரகானசந்திரனேவெல்லமாட்டான், விரித்தகதிரினிலே
சிவெங்கதிரில்வெட்டமேனியிலும்வடுப்படான்வெல்வான்றானே.

(இ-ள்) குறிகேட்கவந்தவொருவன் தன்காரியத்தைச்சொல்லிக் கொண்டே முன்னர்பூரணத்தில்வந்தாலும், பின்னர்சூனியத்தில்வந் துவிடுவானாகில்அக்காரியம்தீதாம், முன்புசூனியத்தில்நின்று பின்பு பூரணத்தில்வருவானெனில் மத்திமம்-இவ்விரண்டுமாறுபாடுமில்லா மல்வந்தவன் கதழாமல் பூரணபக்கத்திற்றானேயிருந்து, தான்வந்த காரியத்தைச்சொல்லிமுடித்துவிடுவானெனில் அக்கருமம் நன்கின தாமென்றறிக,போர்க்குறியைச்சொல்லுமிடத்துச் சந்திரகலையியங் கும்போதுசென்று சூரியனியங்கும்போதுகளத்தினேரில்எதிரிஎப் படிப்பட்டவனானாலும்தோற்பன், இப்படியல்லாமல் சந்திரனியங் கும்போது புறப்பட்டுச்சந்திரனிற்றானேபோர்கலக்கில்தோற்பன் இதுநிற்க சூரியனிற்றானேபுறப்பட்டுஅச்சூரியனிற்றானே போரில் வெல்வதிலும்தன்மேலொருபடைபடாமல் வென்றுவருவன் எ-று.

போர்வெல்லுமார்க்கங்கூறுகின்றார்.

வெல்வனமரிருவர்பேரெழுத்தினையுமெண்ணின்மிகுந்தவெழு
த்துடைய-அ-இ-உ-எ-ஒ-வென்னு, நல்லவெழுத்துடனே- ஆ-
ஈ ஊ-ஏ ஓ- கூட்டிநலத்திகழ்பாலன்குமரனரசனேவிருத்தன்
சொல்லுமவர்பேரின்முதலெழுத்தி லுயிரெழுத்தைத்துலங்கி

யவத்தானத்திற்றுகளறவேகூட்டில்,எல்லைமுதற்றனதநிலெழுததுடையோனவெல்வனிருவரையுமிவராற்சாமிரட்டையெழுதம்தானே. - - - - - - *

(இ-ள்) அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஒ ஓ இவைமுதலாவது பாலன்கூறெனவும், இரண்டாவதுகுமரன்கூறெனவும், மூன்றுவதுஅரசன்கூறெனவும்,மற்றவிரண்டும்விருத்தன்கூறெனவும்கொள்ளவேண்டியது, இதில்சண்டைக்காரனுடையபேரில்முதலெழுத்தைப்பார்க்கும்போது ஆ-வொலியேலாவுடனேயும்,ஏ- யொலியேலேயுடனேயும் ஓ-வொலியேலோவுடனேயுங்கூட்டிக்கொண்டு அவர்களைஇவ்வெழுத்துக்களின்படிபாலனகுமரன் அரசன்விருத்தனுக்கிபாலன் குமரனையும்அரசனையும்வெல்வானெனவும், விருத்தன்மற்றவர்களால்படுவானெனவுஞ்சொல்லவேண்டியது அதிலும்-எஏ-ஒஓ- விருத்தன்கூறு,இவ்விரண்டெழுத்துக்களைக்கொண்டவன்அவர்களாற்படுவான்

கருப்பக்குறியின்முறைகூறுகின்றார்.

இரட்டையாமுபயத்திற்கேட்ட பிள்ளையினியபூரணத்திலாண்குனியத்திற்பெண்ணும், மருக்குழலாளிடத்துயிரைவிடியற்காலமகிணன்வலத்துயிரதனால்வாங்கநட்பாற், தரிக்குநிலம்புதன்வெய்யோனப்புமந்தன்சந்திரன்றீவியாழஞ்சேய்தன்கால் வெள்ளி,நெருக்கியவம்பரம்பூதங்கிழமையிந்தநெறிநிற்கினன்மைமிகநிகழுந்தானே. - - - *

(இ-ள) முன்சொன்னகருப்பக்குறிகளுமல்லாமலிதுவுமொன்றெனக்காண்க.யாதெனில்உபயசரணங்கணடக்கும்போதுகேட்கப்பெற்றபிள்ளை இரட்டைப்பேறெனலாம், எப்பக்கமாயிருக்கினும்பூரணபக்கம்-ஆண், குனியபக்கம்பெண், ஆனாலும் மேற்கவிகளிற்சொல்லியபயன்றருகுமெனக்கொள்க. இதுநிற்கவைகறைப் பொழுதில்மனைவிக்குச்சரம் இடதுபக்கத்தில்நடந்துமகிணனுக்குவலத்திநடந்தாலதையம்மகிணன் அவ்வலச்சரத்தாற்றனேவாங்கி யுட்கொள்ளு மப்பியாசஞ்செய்துகொண்டுவருவானெனில்மனைவியிவன்வயமாவாள் பிரலிமுகநோக்குங்கருத்துவிழையாள், அப்படிவாங்குவதுபன்னிரண்டுதரம்வாங்கியுட்கொள்வதெனறுஞ் சொல்லுவார்கள்,அல்லாமலும்வாரசரங்கள் எந்தெந்தப்பூதியங்களி லுதிக்கவேண்டுமெனில்புதன்-பிருதிவியில்,ஞாயிறு-அப்பில், சனியுந்திங்களும்தேயுவில்,வியாழமுஞ்செவ்வாயும்-வாயுவில், வெள்ளிஆகாயத்திலுதிக்கவேண்டியது, உதிக்கில்அவ்வாரஞ்சரியாய்நடந்து அதனாலவரும்நன்மைகள்மிகுபலனைவிளைக்கும்-எ-று. (சச)

இன்னதற்கு மூலமின்னதென்றுங் கூறுகின்றார்.

நிகழ்புவிக்குமூலநீர்வாயுசீவனென்றிதாதுகனல்விண்ணுநினைக்கு ங்காலே,புகழுடனேபூதத்திற்குளதேசொல்க பொருவில்சரரா சிவெய்யோன்புதும்வெண்டிங்கள்மகிழ்கொள்திரராசியாமுபய ராசிமறங்கிளருஞ்சுழிமுனையாம்வாரந்தோறு, பகுதல்படர்துயி ர்பலிகுநிலைமைதன்னை பங்கயவாதனத்திருந்துபார்ந்துபாரே.

(இ-ள்) பிருதிவிற்குமூலம்-அ-வா-சீவன் க ஆதாது இப்படிநி னாநிரைமே ஒன்றுக்கொன்றுஆதாரமாய்வரும், அவைகளை விளங்க விங்ஙனம்விபரமாய்ச்சொல்லவிலையாயினும் இதனையும்சரராசியெ ன்னப்பட்டசூரியனையும்,திரராசியாகியசந்திரனையும், உபயராசியா கியசுழிமுனையையும்,மற்றவற்றின்பலன் முதலியகூறுபாட்டையும் பங்கயாதனத்திலிருந்து பரிவுற்றுசிவயோகஞ்செய்காலல்லது நன் குணர்தலரிது,உயிர்பாழ்போகாது, சீவன்முத்தனுதனுக்குமதுமார் க்கம்இல்லையேயல் அவம்போகுமென்றறிக-எ-று. (சரு)

மூன்றுநாடிகளின் முறைமைகூறுகின்றார்.

பாரிதனைக்கதிர்மதிற்சுன்வாழ்வுகேடு பண்டைநிலையிம்மூனறு ம்புரிந்துகேட்கில், மேரடகுஞ்செல்வம்வரும் வெய்யோனுகி ல் வெண்மதியங்கேடாகும்விரைந்துவாயுத், திரமிகுசுழிமுனை தானுகில்முனபிற் சிறுகாலும்பெருகாதுதேவரானேர் போர ருகில்வருமெனினும்மதியில்வாரர் பொங்கியசெங்கதிர்வருவ ரீபுகனறேம்றுமே - - - - *

(இ-ள்) நாம்சொன்னஇச்சரநூலைப்பரிவுடன பார்ப்பாயாக, சூரியன சந்திரன சுழிமுனை யெனறு மிம்மூனறு நாடிகளு ஞ்ஞும்வாழ்வுகேடு நிலைமையெனகினற மூனறுகருமதிதானப் பல னகளைக்கேட்குமிடத்தில் சூரியனுகில்நனமையும் மிகுந்த செல்வத் தையுமடைவார்கள் சந்திரனுகில்கேடுமுதலிய கனவியகுறைவாகு ம் சுழிமுனையாகில்முனபுள்ளபடி ஏராமல்குறையாமல் நிறைவாகு ம்அனறியுந்தேவாதிதேவர்களாலே வசீகரிக்கப்பட்டவனுகிலும் செ யாசெயத்தின முனனிலையில்வருவோமெனறு உருதியாகச் சொல் லினுஞ்சந்திரனையதிகமாக வியங்கிடில்வாரார் சூரியனையதிகப்ப டில்வருவாரெனறுகாண்க-எ-று. (சுள)

இதுவுமது-உபசாந்தங்கூறுகினறார்.

நாதமுறைத்தொகையல்வுஞ்சூரியனேடாம் நன்மதியமேல் வாயுநடக்குமாகிற்றுமிளைத்தலகிளையிளைத்தல்பொருள்கேடா தல்சாகு வருண்டகுடிவைதப்பாதாகும், பேரமிடத்தினமதி

யாகின மருத்தைப்போக்கிப் பொருந்துமடி பிரட்டித்துப் போகநனரு; தேமருவுகதிரானுயிருள்வாங்கித் திகழும்வலக் காலொற்றிச்செல்கநனறே - - - *

(இ-ள்) முனசொனனபடி சந்திரனேயதிகமாய்நடந்தால்தம க்குக்கேடுவருவதல்லாமலும் பந்துக்களுக்கு மதுவேவாரும்,சத்து ருக்கள் மேதானறிவருவதுதப்பாது,சந்திரனிற்போகவேண்டியகாரி யமல்லாத காரியார்த்தமாய்போகும்போது சந்திரநடந்தால் சர த்தைநீளவெளிவிட்டு அப்பக்கக்காலையேயிரண்டு மூனறடிமுந்தி வைத்துக்கொண்டு போகவேணடியது, சூரியனிற்போகவேண்டிய காரியமல்லாதகாரியார்த்தமாய்ப் போகும்போது சூரியனடந்தா ல்அச்சரத்தையேறவுள்ளேவாங்கி அவ்வலதுகாலைமுனனிடடுக் கொ ண்டுபோகவேண்டியது, அப்படிப்போகில் பேர்ங்காரியம்நனறு.

சந்திரகலையினடக்கும்பூதியங்களைக்கூறுகினறார்.

செல்லுமதிதனினிலத்திற்சரித்திடிற்றின் வாயுசிவாலயங்கண்ம திற்செய்கழிலங்கட்ட நல்லமுகூர்த்தடல்குடி புகுதல்போக் குநயந்துமரம்வைத்தநனறுநள்நீர்தனனி லொல்லைநறும்வா விகுளஞ்சோலைவைக்கவுழைவிதைக்கமணமுளதே லுவக்கவா கு,நல்லாவிற்றீப்பிணியாங் காற்றிலானை,நற்பரிதேமொட்டக ங்களுவாயோட்டே. - - - *

(இ ள்) சந்திரகலையில்பிருதிவு நடந்தால்-சிவாலயம் மதிநல்- வீடுகட்டடல்குடிபுகுதல் போக்குசாந்தி கழித்தல்மரம்வைத்தல்- இ வைநனறும். அப்புவாகில்குளமுதலியதெடுத்தல் சோலைவைத்தல் நிலத்தைஉழுதல் விதைக்குதல்,விவாகஞ்செய்தல்நனறும். தேயுவா கில்பிணிதீர்த்தலாம்,வாயுவாகில் குதிரைமுதலியதேர்கப்பல் ஓட்ட லாம்.

(இதுவுமது)

ஓட்டியவானதிற்செபிக் கவிற்போர்செய்ய வுள்ளமிபினகலைக் கு மொக்குமீதேசொல்க,நாட்டுமதிவெயிர்கதிரோன,திக்கிலந் தநாடிகளிற் பூரணேச்சொனனறேயாகு, மீட்டுதிசைபிடித்த வைகள்செயல்களாண்பெண் ணியங்கிடலுஞ்சூனியபூரணமே மூத்தும்,வாட்டமறமதித் தெண்ணிநிருமித்தற்கு வல்லவனே சரம்பார்க்கவல்லனனறே - - - *

(இ ள்) ஆகாயமகில்மந்திரஞ்செபிக்கவிற்போற்செய்யநனறு இதுரியகலைக்குமொக்கும், இதுநிற்கசந்திரனறிசையாளுமப்அவ்

லதுசந்திரனேயானாலுஞ், சூரியனேயானாலும்,வந்தவனபூரணபட் சத்தினிலனால்அவனவந்தகாரியம்நனரும் இதுபோகதிசை ஆண்-பெண்-சூனியப்பூரணம்எழுத்துஇவைமுதலாய்ச் சொல்லப்பட்ட இச்சரநூலினுள் நுட்பப்பொருள்களைக்கண்டு இதுஇனனதென்று ம் அதுஇனனதெனறும்நிருமிக்கவல்லவன சரம்பார்க்க வல்லவன் அல்லாதவனல்லாதவனெனறவாறு. (சுகூ)

சரம்பார்ப்போர்.

நனருனமறைவல்லோர் குலமானாலென ஞுமுரைத்தசர நூலி
னடைதப்பாம, லெனருரும்பார்ப்பவரோ பூமிதேவ ரிசைந்த
மானிடப்பிறப்பினினபங்கொள்வார்,குனருத மாபறவையெ
ரும்புதாருக்கொடிமறந்தினளவரிந்துகொண்டுவாழ்ந்து. பொ
னருத்தெய்வீகம்பொருந்துவார்கள் புகுதுவார் பினபிறற்பு
புகலாதாரே, - - - - *

(இ-ள்) நல்லநராமணர் குலத்தவராய்ப்பிறந்தானுமென்னும், அல்லதிழிந்தகுலத்த வராய்ப்பிறந்துமென்னும், இச்சர நூலுணர்ந்து இதனடைதப்பாமல் பார்ப்பவரோபிராமணராவர், சராசரங்களி னுடையதன்மைகளையறிந்தவரா இப்பூமியின்கண்இவரோதேவரென யாவரானும்பூசிக்கப்பட்டுவாழ்ந்துபரம்பொருளிற்சாயுச்சியமடை வர்,பார்க்கமாட்டாதவர் இழிந்தகுலத்தினராய்ப்புன்பிறப்பிற் பிற ந்திறந்துகொண்டிருப்பார்சள்-எ-று. (ருய)

புன்பிறப்பிற்பிறக்கினுஞ்சற்குருமுகத்தாற்பொருந்தியவிச்ச
ரநூலைப்புகலக்கேட்டு, நன்குணர்ந்து நெறிநடப்போன்யாவ
னேனுநாமவனென்றிரண்டில்லைநல்லாகேட்கின், மின்பிறக்கு
ஞ்செந்தழலையடுத்தவெல்லாமிக்கதழலவடிவான விதமேபோ
லத், தன்பிறப்பிலினிபிறவானவமேசாகான் சடைமேனுமணி
ந்தசந்திரனொப்பானே - - - *

(இ ள்) இழிந்தகுலத்திற்பிறந்தவனானுங்குருமுகாந்தரமாயி ச்சரநூலைச்சொல்லக்கேட்டுஇதனையுணர்ந்துஇவ்வழிநடப்பவன்யா வனானும் அவன்யாமேயாவன் வேற்றுமையில்லை, நெருப்புத்தன் னையடைந்தவெவற்றையுந் தன்னுருவாக்கிக்கொள்ளு மியல்போல அவன்யாமேயாவன்அவமாய்ப்பிறந்திறவான, இன்னம்விசேஷமா ய்ச்சொல்லுமளவில் சடாபாரத்தில்நாமணிந்திராநின்ற சந்திரன் போன்று என்முடிமேல் வீற்றிருப்பானென்றவாறு. (ருக)

சரநூல் முற்றிற்று முற்றும்.

